பகவத் பாதை
Bagavath Path
இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு
01-03-2014

# சாஸ்திரங்களின் இயலாமை

- ஸ்ரீ பகவத்



மலேசியாவில் உரை நிகழ்த்துவதற்காக காரில் பயணித்துக் கொண்டிருந்தோம். பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவர் காரை ஓட்டிக்கொண்டிருந்தார்.

அந்தப் பேராசிரியர் சைவ சித்தாந்தத்தின் உயர்வு பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். அப்போது அவருடன் உரையாட நேர்ந்தது.

"சைவ சித்தாந்தத்தில் பசு, பதி, பாசம் எனும் முப்பெரும் உண்மைகள் கூறப்பட்டுள்ளன. பசு என்பது ஆன்மாக்களாகிய நாம்; பதி என்பது இறைவன்; பாசம் என்பது நம்முடைய மலங்கள். ஆன்மாவாகிய நாம் பாசத்தைச் சார்ந்து இருப்பதால், நம்முடைய ஆன்மா, பாசத்தின் இயல்பை அடைந்துவிடுகிறது. பாசத்திலிருந்து விடுபட வேண்டுவதுதான், நாம் செய்யவேண்டுவது. பாசத்திலிருந்து விடுபட நாம் என்ன செய்ய வேண்டும்? நாம் பதியைச் சார்ந்திட வேண்டும்; இறைவனைச் சார்ந்திட வேண்டும். ஆன்மா இறைவனைச் சார்ந்திடுவதன் மூலம் நற்கதியை அடைகிறது...

இது சைவ சித்தாந்தம் கூறும் உண்மை. இதில் குற்றம் எதையாவது கண்டு பிடிக்க முடியுமா? எந்தக் குற்றத்தையும் கண்டுபிடிக்க முடியாது. அறிவுப்பூர்வமானதாகவும், நியாயமானதாகவும் உள்ளது. இறைவனை அடைந்தால் நற்கதி பெறலாம் என்ற கூற்றில் என்ன தவறு இருக்க முடியும்?.....

“சும்மா இருப்பது” என்பது நாம் நமது முயற்சியின் மூலமாகச் சாதிப்பதன்று. மனதளவில் நாம் அடைவதற்கு எதுவும் இல்லாதபோது, சும்மா இருக்கும் நிலை - முயற்சியற்ற நிலை, தாமாக ஏற்படுகிறது.

- ஸ்ரீ பகவத்

ஆனால் இதனை எப்படி செயல்படுத்துவது? ஆலயம் சென்று இறைவனைத் தொழுதல் தான் இறைவனைச் சார்ந்திருத்தலா? அடியவர்களையெல்லாம் அவன் எனப் போற்றுவது தான் இறைவனைச் சார்ந்திருத்தலா?...

சந்திரமண்டலத்துக்குக் கூட நாம் போகலாம். ஆனால் இறைவனிடம் சென்று இறைவனைச் சார்ந்திருப்பது சாத்தியமா? இறைவன் என்பவர் அடையப்படும் பொருளா? இறைவன் காணப்படும் பொருளா? இறைவனை அடைபவன் - இறைவனைக் காண்பவன் என்பவர், இறைவனைவிடப் பெரியவனாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் இறைவன் ஒரு பொருளல்ல. இறைவன் ஒரு object அல்ல...



அப்படியானால் இறைவனைச் சார்ந்திருக்க வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுவது தவறா? இறைவனைச் சார்ந்திருக்க வேண்டாமா? பாசத்தைத்தான் சார்ந்திருக்க வேண்டுமா?...

இப்படித்தான் இரமண மகரிஷியிடம், அன்பர்கள் தங்களது கஷ்டங்களையும் கவலைகளையும் சொல்லித் தீர்வு கேட்கிறார்கள். இரமணர் ஓரிரு பதிலைத் திரும்பத் திரும்பக் கூறுகிறார். 'நீ உன்னை உடல் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். உடலோடு சம்பந்தப்பட்ட ஒரு நபர் என எண்ணிக்கொண்டிருக்கிறாய். உன்னை நீ உடல் எனக் கருதும் வரை உனது கஷ்டங்கள் உன்னைவிட்டுப் போகாது. எப்போது உன்னை நீ ஆத்மாவென்று உணர்கிறாயோ, எப்போது நீ ஆத்ம சாட்சாத்காரம் அடைகிறாயோ அப்போது தான் உனது கஷ்டங்களெல்லாம் உன்னைவிட்டுப் போகும். ஆத்மாவுக்கு மட்டுந்தான் துன்பங்கிடையாது. நீ ஆத்ம சாட்சாத்காரம் அடைந்திடும் வழியைத் தேடு' என்று கூறிவிடுகிறார்...

ஒரே ஒரு அன்பர் மட்டும் இரமணரிடம் விளக்கம் கோருகிறார். 'ஆத்ம சாட்சாத்காரம் என்றால் என்ன? 'நான் ஆன்மா' என, என்னை நான் பிரத்யட்ச பாவமாக அறிந்திடவேண்டுமா?' எனக் கேட்கிறார். 'உங்களை நான் அறிகிறேன். என்னை நீங்கள் அறிகிறீர்கள். நாம் ஒருவரையொருவர் பிரத்யட்சமாக அறிந்து கொண்டிருக்கிறோம். இப்படிப் பிரத்யட்சமாக நாம் ஆன்மாவை அறிந்திடவேண்டுமா?' என அவர் கேட்கிறார்...

இந்நிலையில்தான் இரமணர் தனது கூற்றை மறுபரிசீலனை செய்கிறார். 'நான் ஆன்மா என பிரத்யட்சபாவமாக அறிய முடியாது. ஒரு பேச்சுக்காக நாங்கள் இப்படித்தான் கூறுவோம். ஆத்ம சாட்சாத்காரம், ஆன்ம தரிசனம் என்று நாங்கள் கூறினாலும், உண்மையில் அப்படி எதுவும் கிடையாது.

யதார்த்தத்தில், நாம் அஞ்ஞானத்திலிருந்து விடுபட வேண்டும். அஞ்ஞானத்திலிருந்து விடுபடுவதுதான் ஆன்ம தரிசனம். அஞ்ஞானத்திலிருந்து விடுபடுவதே ஆன்ம சாட்சாத்காரம், இப்படி அவர் கூறி முடிக்கிறார்.....

இதுதான் உண்மை. நாம் செயல்படவேண்டிய களம் அஞ்ஞானம். நாம் விடுபடவேண்டிய இடமும் அஞ்ஞானந்தான். இறைவனை நாம் அடைய வேண்டியதே இல்லை. பதியை நாம் சார்ந்திட வேண்டுவதே இல்லை. பாசத்தைப் புரிந்து கொண்டு பாசத்திலிருந்து விடுபடுவது மட்டுமே நமது வேலை. அஞ்ஞானத்தைப் புரிந்து கொண்டு அஞ்ஞானத்திலிருந்து விடுபடுவது மட்டுமே நமது வேலை. பாசத்திலிருந்து விடுபட்ட நிலையில், நாம் இருக்கும் இடமே இறைநிலை தான். இறைவன் நமக்கு அன்னியமானவன் அல்ல; இறைவன் உயிருக்கு உயிரானவன் என்று கூறப்படுகிறது. நாம் பாசத்துடன் சேர்ந்திருப்பதால் இறைவன் அன்னியனாகத் தோன்றுகிறான். ஆனால் இறைவன் எப்போதும் நம்முடனேயே இருக்கிறான்; அனன்னியமாக இருக்கிறான். பதியைச் சேரவேண்டிய அவசியம் கிடையாது. சேர நினைப்பதுதான், இறைவனை அன்னியப்படுத்துவதாகும். அன்னியமான ஒன்றைத்தான் அடையமுடியும். ஏற்கனவே நம்மோடு இருப்பதை, சென்றடைய முடியாது.

சாஸ்திரங்கள் இப்படி, ஆன்மாவைப் பற்றியும் இறைவனைப் பற்றியும் கூறுகிறது. ஆன்மாவும் இறைவனும் அறியப்படும் பொருள் கிடையாது. சாஸ்திரங்கள் கூறுவதைப் பின்பற்றி நாமும், ஆன்மா என்று கூறுகிறோம்; இறைவன் என்று கூறுகிறோம். அப்படிக் கூறுவது யார்? ஆன்மா, தன்னைப் பற்றிக் கூறுகிறதா? இறைவன் தன்னைப் பற்றிக் கூறுகிறாரா?

நாம் நமது மனதால் – அறிவால்தான் ஆன்மா என்று கூறுகிறோம்; இறைவன் என்று கூறுகிறோம். சாஸ்திரங்கள் கூறியதை நமது கருத்தாக ஏற்றுக்கொண்டு, ஒரு அனுமானமாக இவ்வாறு கூறுகிறோம்.

உண்மையில் ஆன்மாவைப் பற்றிக் கூறும் அறிவுக்கு – மனதுக்கு, ஆன்மாவைப் பற்றி எதுவும் தெரியாது.

இறைவனைப் பற்றிக் கூறும் நம் மனதுக்கு இறைவனைப் பற்றி எதுவும் தெரியாது.

ஆனாலும் அது, தான் தெரிந்து கொண்டதுபோல் பேசுகிறது.

உண்மையில், மனது எதைக் கூறினாலும் அது கற்பிதமே; அறிவு எதைக் கூறினாலும் அது ஒரு கற்பிதமே.

நாம் அனுபவித்து அறிந்த ஒன்றை நமது மனது கூறினாலும் கூட அது கற்பிதமே.

உணர்ந்து கொண்டிருப்பது மட்டுமே நிஜம். நடந்து முடிந்த சம்பவம் அல்லது உணர்ந்து முடித்த அனுபவம் பற்றி மனது கூறினாலும்,

அது கற்பிதமே.

இங்கு நாம் கூறும் இறைவனையோ, ஆன்மாவையோ, அனுபவம் செய்வதுகூட சாத்தியம் கிடையாது. ஆனாலும் தெரிந்ததுபோல் பேசுகிறோம்; தெரிந்து கொண்டதுபோல் சிந்திக்கிறோம்.

இது அப்பட்டமான பொய்; மனோ கற்பிதம்.

இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறிய உதாரணக் கதை இது.

கண்பார்வையற்ற ஒருவருடைய பக்கத்து வீட்டில் கைக்குழந்தை ஒன்று இறந்துவிட்டது. "எப்படி இறந்தது?" என்று கேட்டான்.

"பால் குடிக்கும்போது புறையேறி குழந்தை இறந்துவிட்டது" என அவருடைய நண்பர் கூறினார்.

பார்வையற்றவருக்கு பால் என்றால் எப்படி இருக்கும் என்பது தெரியாது. "பால் என்றால் என்ன? அது எப்படி இருக்கும்?" என்று கேட்டார்.

"பால் வெண்மையாக இருக்கும்" என நண்பர் பதில் கூறினார்.

பார்வையற்றவருக்கு நிறங்களைப் பற்றி எதுவுமே தெரியாது. ஆகவே, "வெண்மை என்றால் என்ன?" என்று கேட்டார்.

வெண்மையை அந்தப் பார்வையற்றவருக்கு எப்படி விளக்குவது? "வெண்மை என்பது கொக்கைப்போல் இருக்கும்", என வெண்மைக்கு ஒரு விளக்கம் கொடுத்தார்.

பார்வையற்றவர் கொக்கை எப்படிப் பார்த்திருக்கமுடியும்? ஆகவே அவர், "கொக்கு என்றால் என்ன? அது எப்படி இருக்கும்?" என்று கேட்டார்.

கொக்கைப் பற்றி எப்படிக் கூறி அவருக்கு விளங்க வைப்பது?

நண்பர் அந்தப் பார்வையற்றவரின் கையைப் பிடித்து அவரது கையை கொக்கைப் போல் வளைவாக்கினார். பிறகு, "கொக்கு இப்படித்தான் நீண்டு வளைந்திருக்கும்" என்று கூறினார்.

பார்வையற்றவர் தனக்குக் கிடைத்த செய்திகளையெல்லாம் ஒருங்கிணைத்துக் கொண்டு கூறினார். "இப்படி நீண்டு வளைந்த ஒரு பொருளை, அந்தச் சின்னஞ்சிறு குழந்தைக்கு ஊட்டினால் அது, தொண்டையில் விக்கி, அந்தக் குழந்தை சாகாமல் என்ன செய்யும்?"

இப்படி, நம் மனதானது, உண்மையை எப்படியெல்லாமோ திரித்து விடுகிறது. பிறகு ஆன்மாவை அடையவேண்டும், இறைவனை அடையவேண்டும் எனப் பேசிவிடுகிறது. அடையமுடியாததை, அடையக்கூடியதாகவும், அடையவேண்டிய ஒன்றாகவும் ஆக்கி,

பிறகு அதனை அடைய முயற்சி செய்யும்படி நம் மனதே முயற்சியைத் தூண்டிவிடுகிறது.

வேதாந்தத்தை எடுத்துக்கொண்டால், "சர்வம் பிரம்ம மயம், பிரம்மம் ஒன்று மட்டுமே உண்மை. உலகம் என்பது மாயை. அது ஒரு தோற்றமே. உலகம் என்று எதுவுமே கிடையாது. பிரம்மம் மட்டுமே உள்ளது. உலகமாகப் பார்க்கக்கூடாது; பிரம்மமாகப் பார்க்கவேண்டும்" – இப்படிக் கூறுகிறது.

வேதாந்தம் நமக்குக் கூறுவதென்ன?

உலகத்தை உலகமாகப் பார்க்காதீர்கள் பொருட்களையெல்லாம் பொருட்களாகப் பார்க்காதீர்கள். அனைத்தையும் பிரம்மமாகப் பாருங்கள்.

'எல்லாம் பிரம்மம்' என்று ஒரு குருநாதர் சிஷ்யனுக்குப் போதித்தார்.

'எல்லாமே பிரம்மம்' என்று சிஷ்யனும் கூறி வந்தான்.

சிஷ்யன் தெருவில் நடந்து போகும் போது எதிரே யானை ஒன்று வந்தது.

சிஷ்யன் அந்த யானையைப் பார்த்து 'பிரம்மம் வருகிறது' என்று கூறினான்.

யானை மீதிருந்த பாகன் எச்சரிக்கை செய்தான். "யானைக்கு சற்று மதம் பிடித்தது போல் இருக்கிறது. ஒதுங்கிப் போங்கள்".

சிஷ்யன் அதைக் கண்டு கொள்ளவில்லை.

"யானையும் பிரம்மமே" எனக் கூறிவிட்டு அவன் போக்கில் போனான்.

யானை அந்த சிஷ்யனைத் தூக்கி எறிந்து விட்டது.

காயம்பட்ட சிஷ்யன் குருவிடம் முறையிட்டான். "எல்லாம் பிரம்மம் என்றதால் காயம் ஏற்பட்டுவிட்டதே? யானை பிரம்மம் இல்லையா?"

குரு சொன்னார். "யானை மட்டும் பிரம்மம் அல்ல. யானை மீதிருந்த பாகனும் பிரம்மந்தான். பாகனாகிய பிரம்மம் சொன்ன எச்சரிக்கையையும் நீ கேட்கவேண்டாமா?"

பிரம்மம் என்ற கருத்து இப்படி குதர்க்கப்படுத்தும்படி ஆகிவிட்டது.

அனைத்தும் பிரம்மம் என்பதை கருத்தளவில் இல்லாமல், உணர்வுப்பூர்வமாக உணர்ந்து கொள்ள வேண்டுமா?

பிரம்மத்தை உணர்ந்து கொள்ள வேண்டியது யார்?

பிரம்மமே பிரம்மத்தை உணர்ந்து கொள்ள வேண்டுமா?

அல்லது மாயைதான் - உலகந்தான் பிரம்மத்தை உணரவேண்டுமா?

சர்வம் பிரம்ம மயம் என்று கூறுவது எது? பிரம்மமே இப்படி, தன்னைத்தானே கூறிக் கொள்கிறதா?

மனதுதான் இப்படிக் கூறுகிறது; நம் அறிவுதான் இப்படிக் கூறுகிறது.

பிரம்மமே பிரபஞ்சமாக வெளிப்படுகிறது. பிரம்மமே உலகமாக வெளிப்படுகிறது. பிரம்மமே மனதாகவும் வெளிப்படுகிறது. பிரம்மத்தின் எத்தனையோ வெளிப்பாடுகளில் நம் மனதும் ஒன்று.

அப்படி வெளிப்பட்ட மனம்தான், தன்னை பிரம்மம் என்று கூறிக்கொள்கிறது.

ஆனால் இது அப்பட்டமான பொய். மனதுக்கு பிரம்மம் என்றால் என்னவென்றே தெரியாது. தெரியாத ஒன்றை, தானாக எண்ணிக்கொள்கிறது. நம் மனது கூறும் பிரம்மம் என்பது மனோமயமானது; மனதின் எல்லைக்குட்பட்டது; மனதால் கற்பிக்கப்பட்டது. அது பிரம்மமே அல்ல.

உண்மையில் மனது மட்டுமே உண்மையானது. அதுதான் யதார்த்தமானது.

மனதின் கற்பனையாகத்தான், ஆன்மாவும், பிரம்மமும் இடம்பெறுகின்றன. மனதின் கற்பனையாகத்தான் பதி என்னும் இறைவனும் இடம் பெறுகின்றான்.

உண்மையான பிரச்சினை, ஆன்மாவிலோ, பிரம்மத்திலோ, இறைவனிடமோ கிடையாது. பிரச்சினைகள் அனைத்தும், நம் மனதில் மட்டுமே உள்ளன. அஞ்ஞானம் என்பது ஆன்மாவுக்கு கிடையாது. ஞானமும், தீர்வும் மனதுக்கு மட்டுமே தேவை. அது ஆன்மாவுக்கோ, பிரம்மத்துக்கோ இறைவனுக்கோ தேவையில்லை.

வேதவேதாந்தங்களும், சித்தாந்தங்களும் மனதில் தீர்வை ஏற்படுத்தவே அமைந்துள்ளன.

மனோரீதியாக வேதாந்தங்களும், சித்தாந்தங்களும் பேசுவதாக இருந்தால் அவை எப்படிப் பேசியிருக்கவேண்டும்?

"எனக்குத் தெரிந்தவரையில் எனக்கு அப்பாற்பட்ட எவையுமே எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தவரையில், எனது எல்லைக்குட்பட்டவரையில் ஆன்மா என்றோ, இறைவன் என்றோ, பிரம்மம் என்றோ எதுவும் கிடையாது. அப்படியொன்று இருக்கவும் செய்யலாம்; இல்லாமலும் இருக்கலாம்"

- இப்படித்தான் ஆன்மா, பிரம்மம், இறைவன் பற்றிய கருத்தைக் கூறியிருக்க முடியும்.

மனதைப் பின்பற்றி சாஸ்திரங்களும் பேசினால் என்ன ஆகும்?

சாஸ்திரங்களும் இதைப்போன்றே கூறுவதானால், அவை சாஸ்திரங்களே அல்ல.

சாஸ்திரங்கள் எப்படிக் கூறவேண்டுமோ அப்படித்தான் கூற வேண்டும். சாஸ்திரங்கள் நேர்முகமான Positive ஆன கருத்துக்களை மட்டுமே தான் கூறவேண்டும். "ஆன்மா உள்ளது; பதி உள்ளது; இறைவன் இருக்கிறான்; பிரம்மம் உள்ளது" - இப்படித்தான் சாஸ்திரங்கள் கூறவேண்டும். அவை அவற்றை ஆணித்தரமாகவும், பிரமாணமாகவும் கூறவேண்டும்.

அவை அப்படித்தான் அமைய வேண்டும்.

அவற்றைப் பிரமாணமாகக் கொண்டு தான் நாம் நமது செயல்பாடுகளையும், செய்யவேண்டியவைகளையும் சரிபார்த்துக் கொள்ளமுடியும்.

சாஸ்திர உண்மைகள் என்பவை ஒரு வீட்டின் சுவர்களைப் போன்றவை. சுவர்கள் இல்லாவிட்டால் அங்கு வீடு என்பதே கிடையாது.

ஆனால் யதார்த்தம் என்பது சுவர்கள் அல்ல. சுவர்களுக்கு இடையேயுள்ள வெட்ட வெளிதான் யதார்த்த உலகம், யதார்த்த வாழ்க்கை.

நாம் எவ்வளவு நேர்த்தியாக சுவர்களை அமைத்தாலும், நாம் பயன்படுத்தப்போவது சுவர்களையல்ல - சுவர்களுக்கிடையேயுள்ள இடைவெளியைத்தான்.

ஆன்ம சாட்சாத்காரத்தை அடைவது, பதியை அடைவது என்பது,

சாத்தியமற்ற ஒன்று. ஆனால் அப்படி அடைய நாம் முயற்சிக்கிறோம்.

இதனால் நம் மனது, தனக்கென்று ஓர் எதிர்காலத்தைக் கற்பனை செய்து கொண்டு அதனை அடையவே வாழ்நாளெல்லாம் போராடிக் கொண்டிருக்கிறது.

அந்தப் போராட்டம், எத்தனை ஜென்மம் (அப்படி ஒன்று இருந்தால்) எடுத்து முயற்சி செய்தாலும் முடிவுக்கு வராது.

நம் மனது என்பது, கணந்தோறும் மாறிக்கொண்டிருப்பது. அங்கு நிரந்தரமான நிலையை உருவாக்குவது என்பது சாத்தியமற்றது.

ஆன்மசாட்சாத்காரம், பதியை அடைதல், பிரம்மத்தை அறிதல், பிரம்மமாக இருத்தல் அனைத்தும் நம்முடைய மனதில்,

மாற்றமில்லாத ஒரு நிலையை ஏற்படுத்தும் ஒரு முயற்சியே.

நிலையான ஓர் அனுபவத்தை ஏற்படுத்தும் முயற்சியே.

அப்படி ஒரு நிலை, சாத்தியம் இல்லாதது; இயற்கைக்கு முரணானது.

நம் மனது, தனது இயலாமையைப் புரிந்து கொண்டு,

தனது முயற்சியைக் கைவிடுமேயானால், எதிர்காலம் என்பது இல்லாமல் போய்விடுகிறது.

தேடுதல் இருக்கும் வரை - அடைய வேண்டிய இடம் இருக்கும் வரை,

தேடுதலும் இருந்து கொண்டிருக்கும்; எதிர் காலமும் இருந்துகொண்டிருக்கும்.

அடைவதற்கென நிரந்தரமான நிலை எதுவுமே இல்லையென்ற புரிதல்தான்,

ஞானம் என்னும் உண்மையான புரிதல்.

அந்த நிலையில், நம் மன இயக்கம் ஒரு பிரவாகமாக மாறிவிடுகிறது. இதுதான் மனம் அடையவேண்டிய முக்தி நிலை.

நம் மனதானது, சாஸ்திரங்கள் சுட்டிக்காட்டும் ஆத்மசாட்சாத்காரம், பிரம்மம், இறைநிலை, பதி ஆகியவற்றை மொத்தமாகப் புறக்கணிப்பதன் மூலமே,

எதிர்காலத்தையும் புறக்கணிக்கிறது. அந்நிலையிலேயே, சாஸ்திரம் கூறும் முக்தி நிலையும் சாத்தியமாகிறது.

நாம் வந்து சேர்ந்த இடம் சரிதானா என்பதை உறுதி செய்ய மட்டுமே சாஸ்திரங்கள் கூறும் உண்மைகளை உதவிக்கு எடுத்துக் கொள்ளலாம்.

புத்தர், நிர்வாண நிலை என்று கூறுகிறார். ஜே. கிருஷ்ணமூர்த்தி தேர்ந்தெடுக்காத அறிநிலை (Choiceless Awareness) என்று கூறுகிறார்.

இப்படி ஒவ்வொருவரும் ஏதோ ஒரு நிலையைக் கூறாமல் கூறிவிடுகிறார்கள். அவற்றைப் பின்பற்றுபவர்களும்,

அடைவதற்கு ஏதோ ஒன்று இருப்பதாக எண்ணி முயற்சியில் இறங்கிவிடுகிறார்கள்.

'சும்மா இரு' என்பதைக் கூட முயற்சியில் சாதிக்கவேண்டிய ஒன்றாக எடுத்துக்கொள்கிறார்கள்.

'சும்மா இருப்பது' என்பது, நாம் நமது முயற்சியின் மூலமாகச் சாதிப்பதன்று.

நாம் அடைவதற்கு எதுவும் இல்லாத போது, சும்மா இருக்கும் நிலை - முயற்சியற்ற நிலை,

தாமாக ஏற்படுகிறது.

நமது அக உணர்வுகளைப் பொறுத்த அளவில்,

அக அனுபவங்களைத் தக்க வைத்துக் கொள்ள நினைப்பதும்,

அப்புறப்படுத்த நினைப்பதும்,

எதிர்காலத்தை உருவாக்குவதே; அடைவதற்கு ஒன்றை உருவாக்குவதே; சுய முரண்பாடே; அகப் போராட்டமே.

"அக உணர்வுகளைப் பொறுத்த அளவில், நாம் செய்வதற்கு எதுவுமே இல்லை" என்பதைப் புரிந்து கொள்ளவேண்டுவது மட்டுமே போதுமானது.

- இந்நிலையில் எதிர்காலம் அனைத்தும் மொத்தமாகப் புறக்கணிக்கப்படுகிறது.

ஆன்மா, பிரம்மம், இறைவன், பதி, Choiceless Awareness, நிர்வாண நிலை, முக்தி நிலை, பிரவாக நிலை என்ற பெயரில்,

தேவையற்ற எதிர்காலத்தையே நம் மனது உருவாக்கிவிடுகிறது.

ஆன்மிக உலகம் என்பது அகத்தைச் சார்ந்தது.

ஆன்மிக உலகத்தைப் பொறுத்த அளவிலும் அகத்தைப் பொறுத்த அளவிலும்

எதிர்காலம் என்பது மட்டுமே பொய், மாயை,

எதிர்காலம் என்ற பெயரில்,

- அடைய வேண்டிய நிலை என்ற பெயரில்,

பிரம்மமே வந்தாலும் சரி,

ஆன்மசாட்சாத்காரமே வந்தாலும் சரி,

அவை அத்தனையுமே மாயை;

அவை அத்தனையுமே நம்மை ஏமாற்றும் மோசடி.

எதிர்காலம் என்பது புற உலகத்துக்கு மட்டுமே உண்டு. முயற்சி என்பது புற உலகத்துக்கு மட்டுமே உண்டு.

முயற்சியோடு தொடர்புடைய அனைத்தும் புற உலகமே.

ஆன்மிக உலகில் முயற்சி ஒன்றுதான் மாயை; முயற்சி ஒன்றுதான் தடை.

ஆரம்ப கால சாதகர்களுக்கு மட்டுமே ஆன்மிகம் என்ற பெயரில் முயற்சி தேவை.

அதற்காக கடைசி வரையிலும் குழந்தையாக இருக்க ஆசைப்படாதீர்கள்.

இரண்டு மூன்று வருடங்கள், அதிகபட்சம் ஐந்து வருடங்கள் மட்டுமே,

நீங்கள் குழந்தையாக இருந்து ஆன்மிக முயற்சிகள் மேற்கொண்டால் மட்டும் போதும்.

முயற்சிகளைக் கைவிட்ட நிலையில், ஆன்மிகத்தில் எதை நீங்கள் அடையவேண்டுமோ அது உங்களையறியாமலேயே உங்களுக்கு வழங்கப்பட்டுவிடுகிறது.

அதன்பிறகு, அக உலகம், புற உலகம் என்ற பிரிவும் நமக்குக் கிடையாது.

நாம் எதிர்கொள்ளும் யதார்த்த உலகம் மட்டுமே உண்டு.

ஆன்மிக உலகம் எனப்படும் நமது அக உலகம் - அக உணர்வுகள்,

அனைத்தும், நமது யதார்த்த உலகத்திற்கு ஆதரவாகச் செயல்பட ஆரம்பித்துவிடுகின்றது.

சாஸ்திரங்கள் கூறும் இலட்சியத்தைப் புறக்கணித்து, சாஸ்திரங்கள் கூறும் இலட்சியத்தை அடைவோமாக. ★

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 16-3-2014 ஞாயிறு | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர், சென்னை. | **“தன்னை அறியும் ஞானம்”** மாலை 5-30 to 7-30 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 98840-97438, 99520-71525 |
| 29-3-2014 சனிக்கிழமை | VGS Meeting Hall, திண்டுக்கல். | **கர்ம வினையைக் கடந்த ஞானம்** மாலை 5-30 to 8-00 மணி வரை | திரு. செந்தில், செல் : 98949-65623 |

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.....

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஜனவரி 19-ஆம் தேதியில் இருந்து திருவண்ணாமலையில் தினமும் ஆன்ம ஞான சத்சங்கம் வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். இச்சத்சங்கத்தில் ஞான தேடுதல் கொண்ட வெளிநாட்டு அன்பர்கள் மற்றும் இந்தியாவின் பல்வேறு பகுதியில் இருந்து வரும் அன்பர்கள் என பலரும் கலந்து பயனடைந்து வருகின்றனர்.

சென்ற ஆண்டு ஐயாவின் சத்சங்கத்தில் கலந்துகொண்டு ஐயாவின் நூல்களை படித்து தெளிவடைந்த ரஷ்ய நாட்டு அன்பர் ஒருவர், ஐயாவின் ஆங்கில புத்தகமான "Don't Delay Enlightenment"யை ரஷ்ய மொழியில் மொழி பெயர்த்ததோடு புத்தகமாகவும் ரஷ்யாவில் வெளியிட்டிருக்கிறார்.

இந்நூலை இவ்வாண்டு திருவண்ணாமலைக்கும் கொண்டு வந்து, இங்கு வரும் ரஷ்ய நாட்டு அன்பர்களுக்கு வழங்கி வருகிறார்.

ஐயாவின் ஞான உரையை ஆங்கிலத்தில் கேட்டு பயனடைந்த ரஷ்ய அன்பர்களுக்கு அவர்களின் சொந்த தாய்மொழியில் ஐயாவின் நூல் கிடைத்திருப்பது மிகவும் மகிழ்ச்சி அளிப்பதாக தெரிவித்திருக்கின்றனர்.

மேலும் (இத்தாலி) லத்தீன் மொழியிலும், (இஸ்ரேல்) ஹீப்ரு மொழியிலும் அந்தந்த நாட்டவர்கள் மொழிபெயர்த்து வைத்திருக்கின்றார்கள். இவைகளையும் www.sribagavath.org என்ற இணைய தளத்தில் வெளியிட்டுள்ளோம்.

இவ்வாறு அயல்நாட்டவர்கள் பலர் ஐயாவை அடையாளம் கண்டு அவரவர் நாட்டு மக்களெல்லாம் பயனடைய ஆர்வம் காட்டுகிறார்கள் என்பதை நினைக்கும்போது நாமெல்லாம் மிகவும் எளிதாக அணுகும் விதத்தில் பகவத் ஐயாவும், நூல்களும் நமக்கு கிடைத்திருப்பது நாம் செய்த புண்ணியமாகும்.

ஐயாவால் ஞானத்தெளிவு அடைந்தவர்கள் அனைவரும் இந்த புதிய அணுகுமுறையை ஏதோ ஒரு வகையில் அனைவரிடமும் கொண்டு சேர்ப்பதில் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள்.

ஐயா வழங்கிய இந்த ஞானப்புரிதலால் பயனடைந்த நாமும் நம்மால் முடிந்த ஏதாவது ஒரு வழியில் இவ்வுண்மையை உலகெங்கும் கொண்டுசெல்ல உறுதுணையாக இருப்போமாக.......

அன்புடன்,
K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

ஞானம் என்றால் என்ன? விடுதலை என்றால் என்ன? நடைமுறை வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை எவ்வாறு எதிர்கொள்வது? என்ற கேள்விகளுக்கெல்லாம் பதில்தருவதாக அமைந்துள்ளது. நமது ஞான முகாம் Audio CD மற்றும் Video DVD -க்கள். ஞான முகாமில் கலந்துகொண்டவர்கள் திரும்ப நினைவுபடுத்திக்கொள்வதற்கும், புதிய அன்பர்கள் தெரிந்து கொள்வதற்கும் இது பயனுள்ளதாக் அமையும்.

1) சேலம் ஞான முகாம் Audio CD
2) நெரூர் ஞான முகாம் Video DVD
3) சென்னை ஞான முகாம் Video DVD
4) விழுப்புரம் ஞான முகாம் Audio CD

ஐயாவின் நூல்கள் மற்றும் ஞானமுகாம் CD -க்கள் அனைத்தும் நமது அனைத்து மையங்களிலும் கிடைக்கும்.

## ஸ்ரீ பகவத் மிஷன் செய்லகளை அறிந்துகொள்ள மற்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நூல்களை நேரில் பெற...

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9952071525.

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்,
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல் Dt.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், P. ராஜவேலன், பூரணி கேஸ் ஏஜன்ஸி,
மாரியம்மன் கோவில் அருகில், ஆக்கூர் (Po.)
மயிலாடுதுறை வழி, நாகப்பட்டிணம் Dt. Pin : 609 801.
செல் : 9150405092

**தபாலில் பெற :** ★ ஸ்ரீ பகவத் மிஷன்,
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 97891-65555

## இராஜபாளையத்தில் ஞானமுகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் இராஜபாளையம் அரவிந்த் ஹெல்த் சென்டரில் ஞானமுகாம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இதனை இராஜபாளையம் அரவிந்த் ஹெர்பல் லேப் - நிறுவனத்தார் இலவசமாக நடத்தித்தருகிறஆர்கள். அன்பர்கள் வழங்கும் பங்களிப்பை பகவத் மிஷனுக்கே நன்கொடையாக வழங்க முடிவு செய்துள்ளார்கள். இங்கு 80 பேர் தங்கி பயன்பெறுவதற்கான வசதி உள்ளது. ஸ்ரீ பகவத் ஐயாவுடன் 3 நாட்கள் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெறுவதற்கு இது சரியான தருணம். இ ந் த ஞானமுகாமில் கலந்துகொண்டு பயன்பெற விரும்புபவர்கள் முன்பதிவு செய்துகொள்வது அவசியம். முன்பதிவு செய்தவர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர். இந்த அரிய வாய்ப்பை அனைவரும் பயன்படுத்திக்கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

முன்பதிவிற்கு Rajapalayam Gnana Muhaam பெயர், ஊர் மற்றும் Cell No. Type செய்து கீழ்கண்ட எண்ணிற்கு SMS அனுப்பவும். அல்லது நேரடியாக தொடர்பு கொண்டு தெரிவிக்கவும். செல் : 9994205880, 9789165555.

முன்பதிவிற்கு இறுதி நாள் : 31-3-2014 ஞானமுகாம் நடைபெறும்

இடம் : அர்விந்த் ஹெல்த் சென்டர்/ அர்விந்த் ஹெர்பல் லேப் (பி) லிமிடெட். 140, முடங்கியர் ரோடு, 4-வது Kgm, இராஜபாளையம்-626 117.

நாள் : 12-4-2014 மாலை 4-00 மணி முதல், 14-4-2014 மாலை 4-00 மணி வரை

**அனுமதி இலவசம்! முன்பதிவு அவசியம்!**

மேலும் விபரங்களுக்கு : செல் : 9994205880, 9789165555.

## ஸ்ரீ பகவத் ஐயாவுடன் சென்னையில் ஒரு நாள் ஞான முகாம்

இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம், 23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரிட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-53.

நாள் : 23-03-2014 காலை 10-30 மணி முதல் மாலை 7-30 வரை

(மதிய உணவு மற்றும் தேனீர் உட்பட நன்கொடை கட்டணம் ரூ.200 மட்டும்) முன்பதிவு அவசியம்

முன்பதிவிற்கு : திரு. சுகுமார் சீனிவாசன் செல் : 9952071525, 9884097438

## ஸ்ரீ பகவத் ஐயாவுடன் பழனியில் ஞானமுகாம்

இடம் : ஸ்ரீ சாய் சதன், சண்முகபுரம், பழனி. (உழவர் சந்தை எதிரில்)

நாள் மற்றும் நேரம் : 30-3-2014 காலை 10-00 மணி முதல் 5-00 மணி வரை

தலைப்பு : புரிதலே ஞானம், அகமும் புறமும், நான் யார்?

நன்கொடை கட்டணம் : ரூ.100/-

நிகழ்ச்சி ஏற்பாடு மற்றும் விபரங்களுக்கு : வேதாத்திரிய பயிலகம், பேராசிரியர் சோமசுந்தரம், செல் : 9942327770

## சீரிய பணியில் ஸ்ரீபகவத் மிஷன், சென்னை

ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்தில் ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக்கிழமை மாலை 5-00 மணிமுதல் 7-00 மணிவரை சத்சங்கமும் அன்பர்கள் கலந்துரையாடலும் நடந்து வருகிறது. இது அன்பர்கள் புரிதலில் தெளிவடைவதற்கு மிகவும் உதவியாக இருக்கும். இதில் சென்னை அன்பர்கள் கலந்து பயன்பெறலாம்.

ஐயாவின் கருத்துகளை அனைவரிடமும் கொண்டு சேர்ப்பதில் சென்னை மையத்தின் பங்கு அளவிடமுடியாதது. கடந்த ஓர் ஆண்டில் மட்டும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 26 ஞான சிறப்புரைகளை சென்னையின் பல்வேறு பகுதிகளில் நடத்தியுள்ளார்கள். மேலும் இதுவரை மூன்று ஞானமுகாமும் நடத்தியிருக்கிறார்கள்.

இனிவரும் ஆண்டில் ஐயாவின் பல சிறப்புரைகளையும், ஞானமுகாமும் நடத்த இருக்கிறார்கள். சென்னையில் உள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் இவர்களுடன் கைகோர்ந்து செயல்படும்படி அன்புடன் அழைக்கிறோம்.

இவை அனைத்தையும் திறம்பட நடத்திக்கொண்டிருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்தின் அங்கத்தினர் அனைவருக்கும் நமது அனைவரின் சார்பிலும் நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்வோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத் தொடர்புக்கு : தலைவர் திரு. சுகுமார் சீனிவாசன், ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், 23/10, பழைய பரோடா வங்கி தெரு, செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053. செல் : 9884097438, 9952071525.

இவண்,
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்

# ஏற்காடு ஞானமுகாம்

சேலத்தில் சென்ற ஆகஸ்ட் மாதம் 2013-ல் திருவருட்சோலையில் சிறப்புடன் ஞானமுகாம் நடைபெற்றது.

அதற்கு அடுத்து தற்போது கோடை வெயிலுக்கு இதமாக ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் ஏற்காடு ஞானமுகாம், மே மாதம் 23, 24 மற்றும் 25 ஆகிய மூன்று நாட்கள் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது கோடை வெப்பத்தின் தாக்கத்தை தவிர்க்க இயற்கைச் சூழல் மிகுந்த ஏற்காடு மலை பிரதேசத்தில் அமைந்துள்ள House of Peace - என்ற அமைதி இல்லத்தில் நடைபெற ஏற்பாடு செய்துள்ளோம்.

ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்டவர்கள் தங்கள் குடும்பத்தினருடன் பங்குபெற தகுதியானவர்களாவர்.

ஐயாவின் நூல்கள் பல படித்திருந்தாலும் நடைமுறையில் நமக்குள் எழும் வினாக்களுக்கு ஐயாவுடன் தங்கியிருந்து கலந்துரையாடலில் ஈடுபடும்போது மட்டுமே நமக்கு விடை கிடைப்பதோடு தெளிவில் உறுதியும் ஏற்படும்.

உண்மை ஒன்றாயினும் அதை பல கோணங்களில் அணுகி தெளிவு பெறுவதற்கு அன்பர்களுடன் ஏற்படும் கலந்துரையாடல் பெரிதும் உதவியாக இருக்கும்.

இதற்கெல்லாம் ஏற்ற வகையில் இவ்விடம் அமைதியும் இயற்கை எழில் சூழ்ந்த இடமாகவும் அமைந்துள்ளது.

குளுமையான ஏற்காட்டில் ஸ்ரீ பகவத் ஐயாவுடன் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெற இது ஒரு சிறந்த வாய்ப்பு.

ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 7 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.

14 வயது பூர்த்தியானவர்கள் மட்டுமே பங்கு பெறலாம்.

நாள் : 23-5-2014 வெள்ளிக்கிழமை மதியம் 3-00 மணிமுதல்
25-5-2014 ஞாயிற்றுக்கிழமை மாலை 3-00 மணிவரை

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.

உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ.1500/- மட்டும்.

75 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் ஏப்ரல் மாதம் 15-ம் தேதிக்குள் முழுப்பணத்தையும் செலுத்தி பதிவு செய்திட வேண்டுகிறோம். தங்கள் பெயர், முகவரி, தொலைபேச இ-மெயில் ஆகிய தகவல்கள் எழுதி அனுப்பவும்.

பணத்தைச் செலுத்தும் முறை

1) M.O 2) D.D. 3) Direct payment

1. ஸ்ரீ பகவத் மிஷன், 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-636 003.

2) வரை ஓலை (D.D.) அனுப்புவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

3. நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC Bank A/C No : 15907620000075
NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

மேலும் விபரங்களுக்கு : 9994205880, 9789165555, 9443290559

அனைவரும் வருக! தெளிவு பெறுக!

# ஜென் கதை
## "எல்லாவற்றையும் தெரிந்துகொள்வது"

வயதான ஞானி ஒருவர் இருந்தார். அவருக்கு மூன்று சீடர்கள் இருந்தனர். ஞானி தனக்கு இறுதிக்காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார்.

அவர் தம் சீடர்கள் மூவரையும் அழைத்து "நான் இன்னும் சிறிது காலமே உயிருடன் இருக்கமுடியும் அதற்குள் உங்களில் ஒருவராவது ஞானம் அடைந்துவிடவேண்டும் எனவே உங்கள் சந்தேகங்களை என்னிடம் கேட்டு தெளிவு பெற்றுவிடுங்கள்" என கேட்டுக்கொண்டார்.

சீடர்கள் மூவரும் எப்படியாவது ஞானம் அடைந்து விடவேண்டும் என்று தங்களுக்குள் இருந்த அனைத்து சந்தேகங்களையும் கேட்க ஆரம்பித்தனர்.

ஞானியும் அவர்களின் கேள்வி ஒவ்வொன்றுக்கும் பதில் கூற ஆரம்பித்தார்.

ஆனால் ஒவ்வொரு பதிலிலிருந்தும் அவர்களுக்குள் பல கேள்விகள் எழ ஆரம்பித்தது. பிறகு ஞானி பார்த்தார், கேள்விகள் முடிவதாக தெரியவில்லை.

எனவே ஞானி அவர்களிடம் "உங்களுக்கு அனைத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருப்பது மிக நன்றாகத் தெரிகிறது. உங்கள் கேள்விகள் இறைவனைப் பற்றியும் இயற்கையைப் பற்றியும் இருக்கிறன.

இதை இங்கிருந்து என்னிடம் கேள்வி கேட்டுத் தெரிந்துகொள்வதைவிட, நீங்கள் மூவரும் தனித்தனியாக உலகெங்கும் பல்வேறு திசைநோக்கி செல்லுங்கள். உங்களுக்கு பல அனுபவங்கள் கிடைக்கும்.

முழுமையாக எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு வாருங்கள். நீங்கள் வரும்வரை நான் காத்திருப்பேன். ஆறு மாதத்திற்குள் திரும்பிவிடுங்கள்" எனச் சொல்லி அனுப்பி வைத்தார்.

மூவரும் வெவ்வேறு திசை நோக்கி பயணத்தை தொடர்ந்தனர். ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு விதமான பல அனுபவங்கள் கிடைத்தது.

ஆறு மாதத்திற்கு பிறகு மூவரும் குருவை வந்தடைந்தனர்.

குரு மூவரையும் உற்று நோக்கினார். பிறகு முதலாம் சீடனைப் பார்த்து கேட்டார் " என்ன தெரிந்து கொண்டாய்?"

"குருவே இறைவனுக்கு என்று தனி உருவம் எதுவும் கிடையாது. இறைவன் எல்லாவற்றிலும் இருக்கிறான். அவனின்றி ஓர் அணுவும் அசையாது, அவனே எல்லாவற்றுக்கும் கர்த்தா" எனக் கூறினான்.

ஞானியின் முகத்தில் ஒரு சலனமும் இல்லை.

இரண்டாவது சீடனைப் பார்த்து கேட்டார். "நீ என்ன தெரிந்து கொண்டாய்?"

இரண்டாவது சீடன் கம்பீரமாக சொல்ல ஆரம்பித்தான். "குருவே இறைவன் எல்லாவற்றிலும் உயிராக இருக்கிறான். நமது ஆழ்மனமாகவும் அவனே இருக்கிறான். அவனை மனதால் ஆழ்ந்து பிரார்த்தனை செய்தால் அனைத்து காரியங்களும் வெற்றியுடன் செய்யலாம்; அவனிடம் பிரார்த்தனை செய்வதன் மூலம் அவன் துணையைப் பெறலாம்" என்றான்.

குருவின் முகத்தில் இப்பொழுதும் சலனமில்லை.

மூன்றாம் சீடனைப் பார்த்து கேட்டார். " நீ என்ன தெரிந்துக்கொண்டாய்?" மூன்றாவது சீடன் அமைதியாகவும் ஏதோ தோல்வி அடைந்தது போலவும் காணப்பட்டான். அவன் மெதுவாகவும், அடக்கமாகவும் கூறலானான்.

"குருவே என்னால் முடிந்தவரை எல்லா திசைகளுக்கும் சென்று ஆராய்ந்து பார்த்தேன். கேள்விகள் அதிகமானதே தவிர பதில் கிடைக்கவில்லை. எதையும் முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. எனவே எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள முடியாது என்று என் தோல்வியை ஒப்புக்கொள்கிறேன். என் கைவசம் இருப்பது என் செயல் மட்டுமே. செயல் ஒன்றே நமக்கு வாய்ப்பு என என் தேடுதலை முடித்துக்கொண்டேன் என்றான்.

மற்ற இரண்டு சீடர்களும் இவனைப்பார்த்து கேலியாக சிரிக்க ஆரம்பித்துவிட்டனர்.

ஆனால் குருவின் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது.

குரு அவனைப் பார்த்து சொன்னார். "எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளமுடியாது என்பதை தெரிந்துகொள்வதே எல்லாவற்றையும் தெரிந்துகொள்வதாகும். அதை நீ கண்டுகொண்டாய். எப்பொழுது நீ தேடுதலை முடித்துக்கொண்டாயோ அப்போதே நீ ஞானமடைந்துவிட்டாய். எனவே நீயே தகுதியானவன்" என முடித்துக்கொண்டார்.

"அகத்தை சீரமைக்க எந்த செயலும் உதவாது; புறத்தை செயலால் மட்டுமே சீர்படுத்த முடியும்"

''எல்லாமே இறைவனின் வெளிப்பாடே, வெளிப்பாட்டைக் கொண்டு மூலத்தை அறிவது என்றும் நடவாத காரியம்".




**Book packet** containing printed books

*If undelivered please return to:*

Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.